


# குறள் வழி

திருக்குறள் முற்றோதல் மாத மின்னிதழ்


திருவள்ளுவராண்டு 2055 மார்ச்(பங்குனி)-2024 மலர்: 2 இதழ்: 3










**இந்நூலைப் பெற : [www.eStore.ValaiTamil.Com](http://www.eStore.ValaiTamil.Com)**

அறம் சார்ந்த உங்கள் தொழில் செழிக்க

**உங்கள் விளம்பரம் திருக்குறள் புரவலராக**

இங்கு இடம்பெறலாம்

## தொடர்புக்கு

**Email:** Kural.Mutrothal@gmail.com

**WhatsApp:** +91 7305571897

# "குறள் வழி" மாத இதழ்

## (தனிச்சுற்றுக்கு மட்டும்)

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் செய்திகளை, செயல்பாடுகளை, நிகழ்ச்சிகளை, திருக்குறள் சார்ந்த உலக முன்னெடுப்புகளை, பரப்புரைகளை தாங்கி மாதம் ஒருமுறை வரும் இதழ்.

### ஆசிரியர் குழு


வலைத்தமிழ் ச.பார்த்தசாரதி


முனைவர். திருமலை ராஜா


அஜய்குமார் செல்வன், சென்னை


மேகா சக்தி பாரதி, கோவை


வி.ஹேமா, திருச்சி

### ஆலோசனைக் குழு


சி.இராஜேந்திரன், IRS (ஓய்வு)


இரவி சொக்கலிங்கம்

### மார்ச் 2024 மாத, "குறள் வழி" மாத இதழ் உங்கள் வாசிப்பிற்கு

- Magazine Page: https://www.valaitamil.com/literature_thirukkural_kural-vazhi/
- To download as PDF: https://drive.google.com/file/d/10kb2gR1UeJ29X94U9S9pPwynctm8figp/view?usp=sharing

**உங்கள் கருத்துகளை எங்களுக்கு எழுத, படைப்புகளை அனுப்ப** : kural.mutrothal@gmail.com

Facebook Page to LIKE and SHARE: https://www.facebook.com/groups/245630171535251

உங்கள் மாவட்டத்தில், உங்கள் அமைப்பில் நடைபெறும் திருக்குறள் சார்ந்த நிகழ்வுகளை எங்களுக்கு அனுப்பவும். மேலும், இவ்விதழ் குறித்த உங்கள் கருத்துகளை எங்களுக்கு எழுதி அடுத்த இதழில் வாசகர் பகுதியில் இடம்பெறச் செய்யவும்.



# உள்ளே...

# ஆசிரியர் பக்கம்

திருக்குறள் ஆர்வலர்களுக்கு வணக்கம்,

தனக்காகவும், தன் குடும்பத்திற்காகவும், தான் வாழும் சமூகத்திற்குமான மூன்றடுக்கு வாழ்க்கையை நாம் அனைவரும் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்க அன்பர்கள் கொண்டிருக்கிறோம். நம் அடுத்த தலைமுறையை உருவாக்கும் ஒரு மகத்தான செயலை முன்னெடுத்துச் செய்வதன் வழியே இதை உறுதிப்படுத்துகிறோம்.

நான் ஒவ்வொரு நாளும் ஒரு சில மணித்துளிகள் இயக்கத்தின் வளர்ச்சி குறித்துச் சிந்திக்கிறேன். தனி மனித மாற்றத்தை ஏற்படுத்தும் இவ்வியக்கத்தின் விளைவைவிட சமூகத்திற்குப் பயனளிக்கும் வேறொரு ஆகச்சிறந்த செயல்பாடு இல்லை என்பதை நான் ஒவ்வொரு நாளும் எனக்குள் உறுதிப்படுத்திக்கொள்கிறேன். இதையே நான் இவ்விதழை வாசிக்கும் உங்கள் ஒவ்வொருவரிடமும் கேட்டுக்கொள்கிறேன். ஒவ்வொரு அடியாகச் சரியான திசையில் மெல்ல நகர்ந்து செல்கிறோம். இதை நாம் அனைவரும் ஒவ்வொரு மாதமும் நாம் வளர்வதன் வழியாகவும், புதிய மாணவர்கள் நம்மிடம் பயிற்சிபெற எண்ணிக்கையைக் கூட்டுவதன் வழியாகவும் அறிந்துகொள்ளலாம். இவ்வாண்டு கடந்த ஆண்டைவிட மேலும் சில மாணவர்களுக்குச் சிறப்பான பயிற்சியை அளித்து மேலும் பல மாணவர்களை உருவாக்கிவிட வேண்டும் என்று பயிற்சியாளர் சிந்திக்கவேண்டும்.

மாவட்டத்திற்கு ஒரு புரவலரை அடையாளம் கண்டு மாவட்டத்தில் ஒரு முற்றோதல் பயிற்சி ஆசிரியரை ஊக்கப்படுத்தவேண்டும் என்று ஒருங்கிணைப்பாளர் திட்டமிடவேண்டும். சிறந்த இதழாக, அனைவரும் பயன்படுத்தும் ஆவணமாக "குறள் வழி" இதழைக் கொண்டுவந்துவிடவேண்டும் என்று ஆசிரியர் குழு சிந்திக்கவேண்டும். ஒவ்வொரு நாளும் வளர்கிறோம் என்ற பெருமிதத்துடன் சமூகத்திடம் எதிர்மறை சிந்தனைகளை உள்வாங்கிச் செரித்து, நேர்மறை சிந்தனைகளை விதைத்து அறுவடைக்குக் காத்திருப்போம்..

மாவட்டத்திற்கு 1000 திருக்குறள் நூல்கள் புதிய வடிவமைப்புடன் தயாராகிறது. இரண்டு புதிய பயிற்சி ஆசிரியர்கள் அரியலூர், திண்டுக்கல் மாவட்டங்களை இணைந்துள்ளார்கள். இன்னும் 29 மாவட்ட பயிற்சியாளர்கள் அடையாளம் காணப்படவேண்டும். தொடர்ந்து அனைத்து மாவட்டங்களுக்கும் புரவலர்கள் அடையாளம் காணப்படவேண்டும். அவரவர் மாவட்டத்தில் இவ்விதழில் விளம்பரம் கொடுத்து உதவ முன்வரும் அறம் சார்ந்த அமைப்புகளை, வணிக நிறுவனங்களைக் குறள் வழி இதழ் ஆசிரியர் குழுவிற்கு அறிமுகம் செய்துவைக்கவும்.

திட்ட ஒருங்கிணைப்பாளர்,
**வலைத்தமிழ் ச.பார்த்தசாரதி,**




# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் - என்ன செய்கிறது?

உலகப் பொதுமுறையாம் திருக்குறளை இளம் வயதிலேயே மாணவ மாணவியர் மனப்பாடம் செய்தால் வாழ்நாள் முழுவதும் மனத்தில் நிற்கும். "இளமையில் கல்வி பசுமரத்தாணி" என்பது பழமொழி.

திருக்குறள் மனித இனத்தின், குறிப்பாக தமிழர்களின் மாபெரும் பொதுவுடைமைச் சொத்து. திருக்குறள் நெறிகள் பரவப்பரவ, அறம் பரவும். தமிழ் மொழிப்பயிற்சியும், மாணவர்களுக்குக் கிடைக்கும். அறமும், மொழியும் வளரும். மேலும் அறமும், திறனும், ஒருங்கே வாய்ந்த இளைஞர் சமுதாயம் உருவாகிட வலுவான அடித்தளமாக திருக்குறள் மனனம் அமையும். சமுதாயத்தில் நல்லிணக்கமும், மனித நேயமும் வளரும்.

திருக்குறள் பொருள் பொதிந்த, பொருள் நிறைந்த, இகலில்லா இன்ப வாழ்க்கையின் கையேடு.

கிட்டத்தட்ட 20 ஆண்டுகளுக்கும் மேலாக, 1330 திருக்குறளையும் மனப்பாடம் செய்து ஒப்பிக்கும் மாணவ மாணவியரை ஊக்குவிக்கும் வகையில் தமிழக அரசு சான்றிதழ் மற்றும் பரிசுத் தொகை வழங்கி வருகிறது. திருக்குறள் முற்றோதல் செய்யும் 70 மாணவர்களுக்கு, 2021 ஆம் வருடம் வரை, தலா ரூ.10000/- திருவள்ளுவர் தினத்தன்று அரசு வழங்கி வந்தது.

இந்த சூழ்நிலையில் தமிழக அரசு 2022 ஆம் ஆண்டு சட்டசபையில் 70 மாணவர்கள் என்ற உச்சவரம்பை நீக்கியது.பரிசுத்தொகையும் உயர்த்தப்படும் என்று மாண்புமிகு தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர் சட்டசபையில் அறிவித்தார். {தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை. தமிழ் வளர்ச்சி மானியக் கோரிக்கை - 46 அறிவிப்புகள் (2021-2022)}. கடந்த 20 ஆண்டுகளுக்கும் மேலாக இதுவரை ஆண்டுதோறும் பரிசு பெறும் மாணவர்களின் வயதைப் பார்த்தால் 95 விழுக்காடு மாணவ/மாணவியர் 14 வயதுக்குட்பட்டே இருக்கிறார்கள். ஆறு/ஏழாம் வகுப்புக்குள் மனனம் செய்துவிட்டால், பிறகு மேல் வகுப்புகளில் பொருளுணர்ந்து படிக்க ஏதுவாக இருக்கும். தனிவாழ்வில் நிறைவான வாழ்க்கை வாழவும், சமுதாய பிரச்சனைகளை திருக்குறள் துணையுடன் எதிர் கொள்ளவும், இளவயதிலேயே 1330 அருங்குறள் மனனம் பயனுள்ளதாக இருக்கும்.

இந்தப் பின்புலத்தில், வலைத்தமிழ், வள்ளுவர் குரல் குடும்பம், சர்வீஸ் டு சொசைட்டி என்ற மூன்று அமைப்புகளும் இணைந்து, தமிழ்நாடு, புதுச்சேரியில் ஏற்கனவே திருக்குறள் முற்றோதல் பயிற்சியளிக்கும் ஆசிரியர்களை ஒருங்கிணைத்து, ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு ஒருங்கிணைப்பாளர், ஒரு பயிற்சியாளர், ஒரு புரவலர் அடையாளம் கண்டு அக்டோபர் 2021ல் தொடங்கப்பட்டது இவ்வியக்கம். எம்முடன் உலகத் தமிழ்வளர்ச்சி மன்றம், USA இணைந்து ஒரு மாவட்டத்திற்கு 2000 திருக்குறள் நூல்கள் வீதம் ஒரு ஆண்டுக்கு 80,000 திருக்குறள் நூல்களையும், ஐந்து ஆண்டுகளுக்கு மொத்தம் 4 லட்சம் நூல்களையும் அரசுப்பள்ளி மாணவர்களுக்கு இலவசமாக வழங்க முன்வந்தது

## உங்கள் மாவட்ட திருக்குறள் பரப்புரை தேவைகளுக்கு பொறுப்பேற்க திருக்குறள் புரவலர்களை அழைக்கிறோம்.

*உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் நன்கொடை பெறுவதில்லை. ஒவ்வொரு மாவட்டத்திலும் அந்த மாவட்டத்தை சார்ந்த திருக்குறள் முற்றோதல் பயிற்சியாளர் ஒருவரை அடையாளம் கண்டு அல்லது உருவாக்கி பகுதிநேர-முழுநேர திருக்குறள் பயிற்சி வழங்க ஊக்கத்தொகை, மாணவர்களுக்கு சான்றிதழ் அச்சடித்தல், "குறள் வழி" இதழுக்கு விளம்பரம் கொடுத்து இலவச இதழ்களை அனுப்ப உதவுதல் என்று சுயமாக உங்கள் மாவட்டத்தில் பொறுப்பேற்க அழைக்கிறோம். ஊர் கூடி பயணிக்கும் திருக்குறள் தேரை இழுக்க வடம் பிடிக்க வாருங்கள். எமக்கு அறம் சார்ந்த வணிகர்கள் அவர்கள் தொழில்களை விளம்பரம் செய்து உங்கள் மாவட்டத்தில் திருக்குறள் பரப்புரைக்கு உதவலாம்.*




# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் குறிக்கோள்கள்

**1.** தமிழ்நாடு அரசின் புதிய அறிவிப்பைத் தொடர்ந்து, **1330** திருக்குறளையும் மனனம் செய்யும் மாணவர்களை அதிக அளவில் உருவாக்கி, அறம் சார்ந்த, பொருள் வளம்மிக்க நல்லிணக்க சமுதாயத்தைக் கட்டமைத்தல்.

**2.** பள்ளித் தலைமை ஆசிரியர்கள்/ ஆசிரியர்கள், பெற்றோர்களுடன் இணைந்து செயல்பட்டு ஆர்வமும் மனனம் செய்யும் திறனும் மிக்க மாணவர்களை இனம் கண்டு, அவர்களுக்குத் திருக்குறள் முற்றோதல் மனனப் பயிற்சியை **9**-ஆம் வகுப்புக்குள் அளித்தல். அவர்களுக்கு அரசு சான்றிதழ் மட்டுமின்றி உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் "திருக்குறள் முற்றோதல்-இளநிலை" சான்றிதழ் வழங்குதல்.

**3.** வயதுக்கு ஏற்ப, முற்றோதல் முடித்த அனைவரும் கல்லூரி செல்வதற்கு முன்பு முழுமையாக குறளின் பொருளை அறிந்துகொள்ள வழிசெய்தல். அதில் நேர்முகத் தேர்வு வைத்து பொருள் உணர்ந்து படித்துள்ளவர்களுக்கு "திருக்குறள் முற்றோதல்-முதுநிலை" சான்றிதழ் வழங்குதல்.

**4.** திருக்குறள் முற்றோதல் பயிற்றுவிக்க தமிழ்நாட்டின் அனைத்து மாவட்டங்களிலும் தகுதியான அனுபவமும் ஆர்வமும் மிக்க முற்றோதல் முடித்த பயிற்சியாளர்களை அடையாளம் கண்டு பயிற்சியாளராகவும், அந்த பயிற்சியாளருக்கு மாதம் ஒரு ஊக்கத்தொகை வழங்க ஒரு புரவலரையும், மாவட்ட ஒருங்கிணைப்பு செய்ய ஒரு ஒருங்கிணைப்பாளரையும் நியமித்தல்.

**5.** தமிழ்நாடு மற்றும் புதுவையில் பள்ளி, கல்லூரி உள்ளிட்ட கல்விக்கூடங்களில் திருக்குறள் சிலை நிறுவவும், மாநிலம் முழுதும் ஒவ்வொரு ஊரிலும் ஒரு திருவள்ளுவர் சிலை வைத்து திருக்குறள் மறையோதல் செய்து வாழ்வியல் கருத்துகளை உள்வாங்கி வாழ்க்கையை முன்னுதாரணமாக திருக்குறள் வழியில் அமைத்துக்கொள்ள அரசுகளுடன்,அமைப்புகளுடன் உரையாடி உரிய வழிவகை செய்வது. ஒவ்வொரு ஆண்டும் திருவள்ளுவர் நாளில், திருக்குறள் முற்றோதல் முடித்தவர்கள் அனைவரும் அந்தந்த மாவட்டத்தில் உள்ள ஒரு குறிப்பிட்ட திருவள்ளுவர் சிலையின் முன் ஒன்றுகூடி, தமிழ் வளர்ச்சித்துறை, மாவட்ட நிர்வாகம் ஆகியவற்றுடன் இணைந்து குழுவாக "திருக்குறள் முற்றோதல்" செய்து, கற்றதை மறந்துவிடாமல் இருக்க வழிசெய்தல்.

**6.** குறள் முற்றோதல் முடித்த அனைவரின் விவரங்களையும் இணையத்தில் பட்டியலிட்டு, வரிசை எண் கொடுத்து அவர்கள் ஒருங்கிணைந்த வளர்ச்சியை, வெற்றியைப் பெற துணைநிற்றல்.

**7.** குறள் முற்றோதல் முடித்த அனைவரும் ஒருவருக்கொருவர் துணை நின்று கல்வி, வேலைவாய்ப்பு, மகிழ்ச்சியான, நிறைவான வாழ்க்கையை வாழவும், வேலைவாய்ப்பில், தொழிலில் வெற்றிபெறவும் முன்னுரிமை கொடுத்து அவர்களுக்கு உரிய உதவிகளைப் பெற துணைநிற்றல்.

**8.** திருக்குறள் முற்றோதல் முடித்த மாணவர்களுக்கு அரசு வேலைவாய்ப்பில் **5%** முன்னுரிமை வழங்க கோரிக்கை வைத்து முயற்சி மேற்கொள்ளப்படும்.

**9.** பள்ளிகளில் காலையில் ஒரு திருக்குறள் அதிகாரத்தை மறையோதி தொடங்க அரசுக்கு பரிந்துரைத்து அரசு சுற்றறிக்கை அனுப்ப முயற்சிப்பது. அனைத்து தமிழ் நிகழ்வுகளிலும் திருக்குறள் போற்றி பாடி, திருக்குறள் மறையோதி நிகழ்ச்சியைத் தொடங்குவதை நடைமுறையில் கொண்டுவர முயற்சிக்கப்படும்.

**10.** இதுவரை வெளிவந்துள்ள திருக்குறள் மொழிபெயர்ப்புகள்,உரைநூல்கள் மட்டுமல்லாது, திருக்குறள் சார்ந்த அனைத்து விதமான நூல்களையும் தொகுத்து "உலகத் திருக்குறள் ஆராய்ச்சி நூலகம்" ஒன்றை உருவாக்கி, உலகின் திருக்குறள் நூல் என்றால் அங்கு இருக்கும் என்ற நம்பிக்கையை ஏற்படுத்தும் வகையில், தொழில்நுட்பம், தற்சார்பு நிலையை ஏற்படுத்தி நிறுவ முயற்சி மேற்கொள்ளப்படும்.

www.Thirukkural.ValaiTamil.com | Kural.Mutrothal@gmail.com |






# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்

**அரசுப் பள்ளி மாணவர்களுக்கு 1330 திருக்குறள் இலவச மனனப் பயிற்சி**

**(வெற்றிகரமாக முடிக்கும் மாணவர்களுக்குப் பயிற்சி சான்றிதழும், அரசின் முற்றோதல் திட்டத்தில் பங்கேற்க வாய்ப்பும்)**

## மாவட்டப் பயிற்சியாளர்கள்

செங்கல்பட்டு



திருமதி. பி. கற்பகவள்ளி
+91 99525 73398

அரியலூர், புதுச்சேரி



திருமதி. சங்கீதா கண்ணன்
+91 78718 39331

திண்டுக்கல்



திரு. வெ.செல்வன்
+91 97884 25501

தஞ்சை



திருமதி. ச. ஆனந்தி
+91 96008 90134

காஞ்சிபுரம்



திரு. குறள் அமிழ்தன்
+91 93643 23915

காரைக்குடி



திரு. மெ.செயம்கொண்டான்
+91 9865 455036

நாமக்கல்



முனைவர். எ.திருமலை ராஜா
+91 9952 822535

செங்கல்பட்டு



திருமதி. செ.சிந்தாமணி
+91 95976 90745

அரியலூர்



திருமதி. சூரியகலா
+91 80985 79762

திண்டுக்கல்



திருமதி. பி. கௌரி பிரபாகரன்
+91 96008 90134

## ஒருங்கிணைப்பாளர்கள்

### திட்ட ஒருங்கிணைப்பு



திரு. ச. பார்த்தசாரதி
ஆசிரியர், வலைத்தமிழ்




### அரசு மற்றும் பயிற்றுநர் ஒருங்கிணைப்பு



திரு. சி. இராஜேந்திரன், IRS (ஓய்வு),
ஒருங்கிணைப்பாளர், வள்ளுவர் குரல் குடும்பம்



வள்ளுவர் குரல் குடும்பம்

### அரசுப் பள்ளிகள் ஒருங்கிணைப்பு



திரு. இரவி சொக்கலிங்கம்,
நிறுவனர், S2S அறக்கட்டளை



### புரவலர் ஒருங்கிணைப்பு



திரு. கொழந்தவேல் இராமசாமி
Washington DC, USA



திரு. க.செங்குட்டுவன்
திருக்குறள் ஆர்வலர்,
இந்தியா



திரு. செந்தில் துரைசாமி
திருக்குறள் ஆர்வலர்,
Texas,USA




# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்

**அரசுப் பள்ளி மாணவர்களுக்கு 1330 திருக்குறள் இலவச மனனப் பயிற்சி**

(வெற்றிகரமாக முடிக்கும் மாணவர்களுக்குப் பயிற்சி சான்றிதழும், அரசின் முற்றோதல் திட்டத்தில் பங்கேற்க வாய்ப்பும்)

## தலைமைப் பயிற்சியாளர்கள்



திருக்குறள் தூயர்
**திரு. அ. கோபி சிங்**
திருக்குறள் முற்றோதல் பயிற்றகம்,
தஞ்சாவூர்
+91 88385 11065



**திரு. க. கோ. பழனி**
திருவள்ளுவர் கல்வி மன்றம்,
சென்னை
+91 98944 59052



திருக்குறள்
**திரு. க. காமராசு**
உலகத் திருக்குறள் முற்றோதல் மையம்,
திருவண்ணாமலை
+91 63802 78863



**கவிஞர் தமிழ்க்குழவி**
திருக்குறள் வாழ்வியலாக்கப் பயிற்சி மையம்,
நாகர்கோவில்
+91 9442580620



திருக்குறள் நினைவாற்றலர்
**த. தமிழ் மகிழ்நன்**
இறை திருக்குறள் பயிற்றகம்,
திருக்கழுக்குன்றம்
+91 92802 53329

**மாவட்டத்திற்கு 1000 திருக்குறள் நூல்கள் வீதம்**
**ஆண்டுக்கு 40000 திருக்குறள் நூல்களை**
**அடுத்த பத்து ஆண்டுகளுக்கு இலவசமாக வழங்குவோர்:**
**உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம், USA**

## பயிற்சி விவரங்களுக்கு

E-Mail: kural.mutrothal@gmail.com
Web: www.Thirukkural.ValaiTamil.com
WhatsApp: +91 73586 44673

**முற்றோதல் முடித்தவர்கள் பதிவு செய்ய**

www.ValaiTamil.com/mutrothal-students-register.php



## உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் 2024 இலக்குகள்




- மாவட்டங்களில் பயிற்சிகளை விரிவாக்குதல். மாவட்டத்திற்கு 100 மாணவர்கள் முற்றோதல் பயிற்றுவிக்கும் இலக்கை நோக்கி நகர்தல்.
- தமிழ்நாடு அளவில் 124 என்ற தற்போதைய எண்ணிக்கையை குறைந்தது 1000 ஆக உயர்த்துதல்.
- குறள் வழி இதழை நிலைநிறுத்தி, பதிவு செய்தல்.
- மாவட்ட அளவில் புரவலர், பயிற்சியாளரை விரிவாக்குதல்.
- தொய்வு உள்ள சில மாவட்டங்களில் கவனம் செலுத்தி பலப்படுத்துதல்.
- முற்றோதல் ஆசிரியர் பயிற்சிக் கட்டமைப்பை உருவாக்குதல், பயிற்சியை தரப்படுத்தல் .
- 25 ஆண்டுகால 1200+ முற்றோதல் முடித்தவர்களை தொகுத்து மாவட்டம், பயிற்சியாளர், நாடு வாரியாக இணையத்தில் வெளியிடுதல்.
- முற்றோதல் முடித்தவர்களுக்கு அதிக வாய்ப்புகளை ஏற்படுத்தி முன்னுரிமை அளித்தல்.
- மாவட்ட அளவில் 2024 இறுதியில் திருவள்ளுவர் நாளில் மாவட்ட அளவில் குழுவாக முற்றோதல் செய்யவைத்தல்.
- திருக்குறள் ஆளுமைகளைத் தொகுத்து வெளியிடுதல்.
- 25 ஆண்டுகளாக முடித்தவர்களுக்கு முற்றோதல் இளநிலை சான்றிதழ் வழங்குதல்.
- முற்றோதல் –முதுநிலை நேர்முகத் தேர்வுக்கு பாடத்திட்டம் வரையறை செய்து பயிற்சிக் கையேடு வெளியிடுதல்.
- மாவட்ட அளவில் திருக்குறள் சார்ந்த ஆளுமைகள், ஆர்வலர்களை மாவட்டக் குழுவில் சேர்த்தல். அனைவரும் ஒருங்கிணைந்து குழுவாக கைகோர்த்து செயல்படுதல்.
- உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம், தமிழிருக்கைக் குழுவுடன் இணைந்து 80000 திருக்குறள் நூல்களை அரசுப்பள்ளி மாணவர்களுக்கு கொண்டுசேர்த்து பயிற்சியை வழங்குதல்.

## திருக்குறள் முற்றோதல் பயிற்சி தொடக்க விழா - மறுபதிவு..

பள்ளிக் கல்வித்துறை மற்றும் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் இணைந்து நடத்தும் பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கி முற்றோதல் பயிற்சி தொடக்கவிழா, தி.நகர், சென்னை, ஹோலி ஏஞ்சல் ஆங்கிலோ இந்தியன் மேல்நிலைப்பள்ளியில் இன்று (05.12.2022) காலை 9:30 மணிக்கு நடைபெற்றது.

திருக்குறள் நூல்களை இவ்வாண்டு, முதல் மாவட்டமாக சென்னைக்கு வழங்கி **மாண்புமிகு கல்வியமைச்சர் திரு. அன்பில் மகேஷ் பொய்யாமொழி** அவர்கள் 05-12-2022 (திங்கள்கிழமை) அன்று தொடங்கிவைத்து சிறப்புரையாற்றினார்.





# நன்றி... நன்றி... நன்றி...



**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்துடன் இணைந்து, தமிழ்நாட்டு அரசுப்பள்ளி மாணவர்களுக்கு இலவசமாக திருக்குறள் நூல்களை வழங்கும் உலகத் தமிழ்வளர்ச்சி மன்ற ஒருங்கிணைப்பாளர் மருத்துவர் விஜய் ஜானகிராமன் அவர்களுக்கும், அவருடன் துணைநிற்கும் அனைத்து புரவலர்களுக்கும் நன்றி...**

# திருக்குறள் ஐம்பெரும் விழா –2024

வலைத்தமிழ்.காம் www.ValaiTamil.com | வள்ளுவர் குரல் குடும்பம் | கற்க கசடற karka.in

**தேதி**
11-02-2024, 10:00AM - 3:00PM
ஞாயிற்றுக்கிழமை

**விழா நடைபெறும் இடம்**
திருவள்ளுவர் அரங்கம்
Indian Officers Association(IOA),
Sri Krishnapuram Street, Royapettah,Ajantha Bus Stop,
Thiru Vi Ka High Road, Chennai - 600014.

Location Map

*உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் ஒருங்கிணைப்பில் வலைத்தமிழ், வள்ளுவர் குரல் குடும்பம், சர்வீஸ் 2 சொசைட்டி, கற்க கசடற அமைப்புகளின் சார்பில் நடைபெற்ற திருக்குறள் ஐம்பெரும் விழா சிறப்பாக நடைபெற்றது.*

## விருந்தினர்கள் வருகை.. நுழைவாயில் வரவேற்பு














உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத் தலைமைப் பயிற்சியாளர் திருக்குறள் பழனி, கேளம்பாக்கம், சென்னை செங்கல்பட்டு மாவட்டப் பயிற்சியாளர்கள் திருமதி. கற்பகவள்ளி, திருமதி. சிந்தாமணி ஆகியோருக்கு நன்றி.











தமிழ் மேடைகளில் குறிப்பாக திருக்குறள் மேடைகளில் திருக்குறளில் சில அதிகாரங்களை மறையாக ஓதி, செந்தமிழ் அந்தணர் இளங்குமரனார் அவர்கள் இயற்றிய திருக்குறள் போற்றிப் பாடி, தமிழ்த்தாய் வாழ்த்து பாடி தொடங்குவது சிறப்பு.. மேடையில் பாடிய பாடல்களை இணையச் சுட்டியில் அனைவரும் பயன்படுத்தலாம்.



நவில்தொறும் நூல்நயம் - 50வது வார பொன்விழா நிகழ்ச்சி
தலைமையுரை: மேனாள் துணைவேந்தர் பேராசிரியர் முனைவர். இ.சுந்தரமூர்த்தி,
நயவுரை: பேராசிரியர் முனைவர். அரங்க இராமலிங்கம்











திருக்குறள் வரலாற்றில் முறையாக *2018* ஆம் ஆண்டு அமெரிக்காவில் தொடங்கப்பட்டு, ஆறு ஆண்டுகள் பங்காற்றி உலகத் திருக்குறள் மொழிபெயர்ப்புகளை முழுமையாக ஆய்வு செய்து, ஆவணப்படுத்தி, தொகுத்து வரும் "உலகத் திருக்குறள் மொழிபெயர்ப்புத் தொகுப்புத் திட்டம்" தனது இறுதி அறிக்கையாக ***"Thirukkural Translations in World Languages"*** என்ற ஆங்கில நூலை வெளியிட்டது. அரங்கத்தின் பெயர் "திருவள்ளுவர் அரங்கம்" என்பது அதை பதிவுசெய்த பிறகுதான் தெரிந்தது. திருவள்ளுவர் அரங்கத்தில், நூலினை மாண்பமை நீதியரசர் அரங்க. மகாதேவன் அவர்கள் வெளியிட, செம்மொழி ஆய்வு நிறுவனத்தின் துணைத்தலைவர், மேனாள் துணைவேந்தர் பேராசிரியர் முனைவர். இ. சுந்தரமூர்த்தி, தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் முனைவர் ஔவை அருள், மேனாள் துணைவேந்தர் முனைவர் சி.சுப்பிரமணியம், வி.ஜி.பி. உலகத் தமிழ்ச் சங்கத்தின் தலைவர் கலைமாமணி டாக்டர் வி.ஜி.சந்தோசம் ஆகியோர் பெற்றுக் கொண்டனர்.




**நூலை இணையம் வழியாகப் பெற:**
**www.eStore.ValaiTamil.com**



## Highlights of Thirukkural Translations

**Total number of translations in all languages: 350+**

**Number of languages: 58**

Indian Languages: 29
Other World Languages: 29

**Translations into UN official languages:**
Translations have been completed for all the six official UN languages.

**Translations into UNESCO official languages:**
Thirukkural has been translated into nine out of 10 official languages of UNESCO, Portuguese is the only exception.

**Global reach of Thirukkural translations:**

- Number of countries with translations in at least one of their official languages: 148
- Countries with no translation even in one official language: 45
- Indian language translations planned by CICT: 52
- Other world language translations planned by CICT: 6

**Official languages the Kural is yet to be translated : 158**

**Number of official languages with more than a lakh speakers without a translation of the Kural: 105**

- Languages spoken in Africa: 49
- Languages spoken in Americas: 5
- Languages spoken in Asia: 20
- Languages spoken in Caribbean: 2
- Languages spoken in Europe: 26
- Languages spoken in Oceania: 3



 www.Thirukkural.ValaiTamil.com



ValaiTamil Publication

THIRUKKURAL TRANSLATIONS IN WORLD LANGUAGES

# THIRUKKURAL TRANSLATIONS IN WORLD LANGUAGES

First Comprehensive Information on the Thirukkural Translations in World Languages




Sa. Parthasarathy | N.V.K. Ashraf | C. Rajendiran
Elangovan Thangavelu | Senthilselvan Duraisamy | Ajey Kumar Selvan

















உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் தூண்களாக விளங்கும் திருக்குறள் முற்றோதல் தலைமைப் பயிற்சியாளர்கள், மாவட்டப் பயிற்சியாளர்கள் அனைவருக்கும் வள்ளுவர் குரல் குடும்பம் வழங்கிய "பாமரருக்கும் பரிமேலழகர்" உரை நூல்கள் பரிசாக வழங்கப்பட்டது. மேலும், உலகத் தமிழ்மொழி அறக்கட்டளை, சிகாகோ அமெரிக்கா வழங்கிய திருக்குறள் தங்கப்பதிப்பும் வழங்கப்பட்டது.















*விழாவில் முதன்முறையாக உலக மொழிகளில் திருக்குறள் மொழிபெயர்ப்புகள் கண்காட்சியை மிக நேர்த்தியாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது அனைவரையும் கவர்ந்தது.*








புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும் - குறள்: 298

புறத்தே தூய்மையாக விளங்குதல் நீரினால் ஏற்படும்; அதுபோல அகத்தே தூய்மையாக விளங்குதல் வாய்மையால் உண்டாகும்.

அரங்கு நிறைந்த கூட்டம். திருக்குறள், தமிழ் என்று கூட்டம் போட்டால் மக்கள் வருவதில்லை, கூட்டம் கூடுவதில்லை என்பதில் உண்மையில்லை என்பதை நிரூபிக்கும் வகையில் தரமான சிந்தனையாளர்கள், திருக்குறள் ஆர்வலர்கள், மாநிலம் முழுதும் அமைப்புகளை நடத்துபவர்கள் திரண்ட கூட்டமாக அமைந்தது. முகூர்த்த நாள் என்பதால் நான்கில் ஒரு பகுதியே வந்திருந்த நிலையில், வழக்கமான நாளாக இருந்திருந்தால் இருக்கை, உணவு என்று திட்டமிட கூட்டத்தை சமாளிப்பது சிரமமாக இருந்திருக்கும் என்று உணர்ந்தோம்.








ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன் றில் - குறள் 233

உயர்ந்த புகழ் அல்லாமல் உலகத்தில் ஒப்பற்ற ஒரு பொருளாக அழியாமல் நிலைநிற்க வல்லது வேறொன்றும் இல்லை.

டென்மார்கிலிருந்து தனது தாயாருடன் வந்திருந்து நான்காவது அமர்வில் கலந்துகொண்ட நண்பர் திருக்குறளை, ஆத்திச்சூடியை டேனிஷ் மொழியில் மொழிபெயர்த்த திரு. நாகலிங்கம் கஜேந்திரன் அவர்களுக்கு நன்றி..





மியான்மர் நாட்டிலிருந்து நேரில் வந்து நான்காவது அமர்வில் கலந்துகொண்ட திரு. கண.இளங்கோவன், பொதுச்செயலாளர், தமிழ்க் கல்வி வளர்ச்சி மையம், மியான்மர் அவர்களுக்கு நன்றி.. திருக்குறள் பர்மீஸ் மொழிபெயர்ப்பை நமக்கு கொண்டுவந்து கையளித்தார்.



உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் புரவலர் குழுவின் ஒருங்கிணைப்பாளர், திருவள்ளுவர் கலை மற்றும் அறிவியல் கல்லூரியின் தாளாளர் திரு. செங்குட்டுவன் -கரூர், திருமூலநாதன் அறக்கட்டளை நிறுவனர் திரு.தயாபரன், திருச்சி ஆகியோர்.









## உலகத் தமிழ்மொழி அறக்கட்டளை, சிகாகோ அமெரிக்கா, தமிழ்ப்பண்பாட்டுக் கையேடு திருக்குறள் நூல் மூன்றாம் பதிப்பு வெளியீடு (தங்கப் பதிப்பு)

***வெளியிடுபவர்:*** *பேராசிரியர் முனைவர். இ. சுந்தரமூர்த்தி, துணைத்தலைவர், செம்மொழி தமிழாய்வு மத்திய நிறுவனம்*

***கருத்துரை:***

- *திருமதி. மீனாட்சி இராம்மோகன், இயக்குநர், உலகத் தமிழ்மொழி அறக்கட்டளை., சிகாகோ, அமெரிக்கா.*
- *திரு. மணி மணிவண்ணன், திருக்குறள் நூல் வடிவமைக்குக்குழு, அமெரிக்கா.*













உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் ஆண்டு விழாவில் ஒவ்வொரு ஆண்டும் திருக்குறள் தொண்டில் குறிப்பிடத்தக்க நிலைத்த சாதனையை செய்தவர்களுக்கு உயரிய விருதான **"திருக்குறள் வாழ்நாள் சாதனையாளர்"** என்ற விருதினை வழங்கி சிறப்பிக்கிறது. அதன்படி இவ்வாண்டு கருணாகரன் நினைவு திருக்குறள் நூலகம் - **பேராசிரியர் திருக்குறள் பாஸ்கரன்** அவர்களுக்கு திருக்குறள் வாழ்நாள் சாதனையாளர் விருது வழங்கப்பட்டது.










உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் ஆண்டு விழாவில் ஒவ்வொரு ஆண்டும் திருக்குறள் முற்றோதல் பயிற்சியில் குறிப்பிடத்தக்க சாதனையை செய்து, அதிக மாணவர்களை உருவாக்குதல், புதிய உத்தியை வகுத்தல், பரவலாக்கலில் புதுமை, முற்றோதல் இயக்கத்தை மாணவர்களைக்கொண்டு கட்டமைப்பதில் வெற்றியடைதல் என்று தொடர்ந்து உழைக்கும் ஒரு பயிற்சியாளருக்கு ஆண்டுக்கு ஒருமுறை **"திருக்குறள் முன்னோடி"** விருது வழங்கி சிறப்பிக்க தீர்மானிக்கப்பட்டது. அதன்படி இவ்வாண்டு **திருமதி. ச.பிரேமா,** தலைமை ஆசிரியை, மீஞ்சூர் ஊராட்சி ஒன்றியத் தொடக்கப் பள்ளி, இராமநாதபுரம். திருவள்ளூர் மாவட்டம் அவர்களுக்கு இவ்விருது வழங்கி சிறப்பிக்கப்பட்டது.






திருக்குறள் மேல் அதிகப் பற்றுக்கொண்ட தொழிலில் சாதித்துவரும் **திரு. முருகன்** அவர்களுக்கு திருக்குறள் நூலை தமிழ்ப்பண்பாட்டுக் கையேடு திருக்குறள் நூலை வழங்கியபோது.




நிகழ்ச்சியில் கலந்துகொண்ட விருந்தினர்களின் ஒரு பகுதி










*ஊடகச் சந்திப்பில்...*




*திருக்குறள் ஐம்பெரும் விழாவில் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் "குறள் வழி" பிப்ரவழி மாத இதழ் மேடையில் வெளியிடப்பட்டது..*



நிகழ்ச்சியின் நான்காவது அமர்வில் "உலக மொழிகளில் திருக்குறள் மொழிபெயர்ப்புகள் - அறிமுகம்" நிகழ்ச்சி சிறப்பாகத் திட்டமிடப்பட்டிருந்தது. இதில் திருக்குறள் அரபு மொழியாக்க அனுபவங்களை பேராசிரியர் முனைவர். ஜாகிர் உசேன் அவர்களும், மியான்மரில் திருக்குறள்-தமிழர் வாழ்வியல் குறித்து மியன்மார் வாழ் தமிழர் திரு.கண இளங்கோவன் அவர்களும், டென்மார்க்கில் திருக்குறள் மொழிபெயர்ப்பு அனுபவம் குறித்து டேனிஷ் திருக்குறள் மொழிபெயர்ப்பை கொண்டுவந்த திரு. நாகலிங்கம் கஜேந்திரன் அவர்களும் கலந்துகொண்டு கருத்துகளை பகிர்ந்துகொண்டனர்.







உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் இரண்டாம் ஆண்டு சந்திப்பு அனைத்து மாவட்ட ஒருங்கிணைப்பாளர்கள், தலைமைப் பயிற்சியாளர்கள், மாவட்டப் பயிற்சியாளர்கள், புரவலர்கள் என அனைவரும் சந்தித்து உரையாட திட்டமிட்டு ஐந்தாம் அமர்வு அமைந்தது. தமிழ்நாட்டின் பல அமைப்புகளிலிருந்து வந்திருந்த அனைவரும் சேர்ந்து கலந்துரையாடினர். ஒருவருக்கொருவர் அறிமுகப்படுத்திக்கொண்டு தங்களது அனுபவங்களை பகிர்ந்துகொள்ளும் நிகழ்வாகவும் இது அமைந்தது. ஹார்வார்டு தமிழிருக்கையின் புரவலர்கள், தமிழிருக்கை அமைப்பினை இயக்குநர்கள் மருத்துவர் விஜய். ஜானகிராமன், மருத்துவர் சம்பந்தம், சித்த மருத்துவர், திருக்குறள் ஆர்வலர், பேராசிரியர். கோ.அன்புக்கணபதி, தமிழறிஞர் நன்னன் மகள் திருமதி. அவ்வை உள்ளிட்டோர் இந்த அமர்வில் பங்கேற்று கருத்தை பதிவுசெய்தனர்.






உலகின் பல மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ள திருக்குறள், தற்போது குஜராத்தியிலும் வெளிவந்திருக்கிறது. மொழிபெயர்ப்பாளர் பி.சி.கோகிலா, சென்னை மாநிலக் கல்லூரியில் இந்தித் துறைத் தலைவராக இருந்து ஓய்வு பெற்றவர். குஜாராத்திலுள்ள பாவ் நகரில் பெண்கள் அதிகம் படிக்க அனுமதிக்காத ஒரு குடும்பத்தில் பிறந்தவர் கோகிலா. தனது விடாமுயற்சியால் இந்தியில் முனைவர் பட்டம் பெற்றார். தந்தையின் தொழில் நிமித்தமாக 30 ஆண்டுகளுக்கு முன்பு சென்னைக்கு வந்தார். குஜராத்தி, இந்தி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் எழுதவும் படிக்கவும் தெரியும். மாநிலக் கல்லூரியில் இந்தி உதவிப் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வுபெற்றவர். நம் திருக்குறள் நிகழ்ச்சியில் கலந்துகொண்டு சிறப்பித்தார்.




திருக்குறளின் ஒரு அதிகாரத்திற்கு ஒரு சிற்பச் சிலை வீதம் அறத்துப்பாலின் அனைத்து அதிகாரங்களையும் சிற்பமாக வடித்து திருக்குறள் விழா கண்காட்சியை எவ்வித கட்டணமும் இல்லாமல், தன்னார்வலர்களாக கலந்துகொண்டு மிகச்செம்மையாக ஏற்பாடு செய்திருந்த குழுவிற்கு வாழ்த்துகள்.



## நன்றி... நன்றி... நன்றி...

அரங்க மேலாண்மை, உணவு திட்டமிடுதல், மேடை அலங்காரம் என்று அனைத்தையும் முழுமையாகப் பொறுப்பேற்று திருக்குறள் தொண்டாற்றிய திருக்குறள் ஆர்வலர், நவில்தொறும் நூல்நயம் நிகழ்ச்சியின் ஒருங்கிணைப்புக்குழுவைச் சார்ந்த திரு.பொன்னியின் செல்வன் அவர்களுக்கு மிகப்பெரிய நன்றி...

தமிழர் பண்பாடான விருந்தோம்பலை , உணவுக்கூடத்தை நேர்த்தியாக மேற்பார்வையிட்டு தன்னுடைய பள்ளியின் ஆசிரியைகளைக்கொண்டு நேர்த்தியாக ஒருங்கிணைத்த பள்ளித் தாளாளர் , ராமானுஜம் அருங்காட்சியகம் , கணிதக் கல்வி மையத்தின் செயலாளர் திரு.போஸ் அவர்களுக்கு மிக்க நன்றி..









வரவேற்பு மற்றும் முன்பதிவை சரிபார்த்தல் , உணவு வழங்கல் உள்ளிட்டவைகளை மிக நேர்த்தியாக காலை முதல் மதியம் வரை தொடர்ந்து செய்துமுடித்த முனைவர்.திருமலை ராஜா, நாமக்கல், திருமதி.சோபனா, அரியலூர் ஆகியோருக்கு நன்றி.

அச்சு நூல்களைப் பராமரித்தல் , முன்பதிவு உள்ளிட்டவற்றில் முழுமையாகப் பொறுப்பேற்று சிறப்பாக பங்காற்றிய திருமதி. சங்கீதா கண்ணன், குடும்பத்திற்கு நன்றி




அரங்கத்தின் பல்வேறு பணிகளை பொறுப்புணர்வுடன் செய்துமுடித்த தஞ்சை மாவட்ட முற்றோதல் இயக்கத்தைச் சார்ந்த திருமதி. ஆனந்தி, திரு. சரவணன் ஆகியோருக்கு நன்றி.

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் தமிழ்நாட்டின் 38 மாவட்டங்கள், புதுச்சேரியிலிருந்து திரளாக வந்திருந்த இயக்கத்தின் மாவட்டத் தன்னார்வலர்கள் அனைவரும் பொறுப்பேற்று மிகச்செம்மையாக நிகழ்ச்சியை பொறுப்பேற்று நடத்தினர்.

சிறு நிகழ்வாக அண்ணா நூற்றாண்டு நூலகத்தில் திட்டமிடப்பட்ட இந்நிகழ்ச்சி ஐம்பெரும் விழாவாக விரிவடைந்து, தரமான அரங்கம், தரமான ஆளுமைகள், தரமான பங்கேற்பாளர்கள், தரமான உணவு, வரலாற்றுச் சிறப்பு மிக்க தரமான நூல்கள் வெளியீடு, பன்னாட்டு ஆளுமைகள் என்று ஒரு திருக்குறள் பன்னாட்டு விழாவாகவே அமைந்தது.

அரங்கம், விருந்தினர்கள் தங்கும் அறைகள் ஏற்பாட்டையும், உணவுத் திட்டமிடுதலையும், புகைப்படம் உள்ளிட்ட அனைத்தையும் நேர்த்தியாக பொறுப்பேற்று செய்துமுடித்த திரு.பொன்னியின் செல்வன் , திரு.கதிரவன் அவர்களுக்கு நன்றி..

அரங்கைச் சுற்றிலும் பல இடங்களில் சுற்றிச் சுழன்று குடும்பமாக சேவையாற்றிய அனைவரின் பெயரையும் குறிப்பிடாமல் உங்கள் அனைவர்க்கும் நன்றி.. இது நம் திருக்குறள் குடும்ப விழா.. நேர்த்தியாகத் திட்டமிட்டு ,கடுமையாக உழைத்து ஆண்டுக்கு ஒரு முறை கூடி , உரையாடி, பயணத்தை மீளாய்வு செய்து மீண்டும் அடுத்த ஆண்டுக்கு திட்டிட்டு சென்றுள்ளோம். 2024ஆம் ஆண்டுக்கான நம் குறிக்கோள்கள், இலக்குகள் தெளிவாக கூட்டத்தில் அறிவிக்கப்பட்டது மேலும் குறள் வழி இதழிலும் குறிப்பிடப்பட்டுள்ளது..

இறுதியாக நன்றியுரை ஆற்றிய திருச்சி திருமூலநாதன் அறக்கட்டளை, திரு. தயாபரன் ஐயா அவர்களுக்கு நன்றி. பயிற்சி கடந்து விழா சிறக்க பொறுப்புகளை அடையாளம் கண்டு செம்மையாக திட்டமிட்டு துணைநின்ற திருக்குறள் பழனி ஐயாவிற்கு நன்றி.

தமிழில் ஒவ்வொரு ஆண்டும் நடைபெறும் இதுபோன்ற செயல்பாடு நிகழ்வுக்கு ஓரிருவர் கையிலிருந்து செலவு செய்வது என்பது தொடர் பயணத்தில் தொய்வை உண்டாக்கும். நல்ல நிகழ்வுகள் என்று அறிந்தால், அது சமூகத்திற்கு பயன்படும் என்று உணர்ந்தால் அவரவர் தங்களால் முடிந்தவற்றை செய்ய முன்வரவேண்டும்.

அந்த வகையில் நாம் நடத்திய இந்த நிகழ்ச்சியில் ஏற்பட்ட செலவீனங்கள் அனைத்தும் திருக்குறள் ஆர்வலர்கள் அரங்கம், உணவு உள்ளிட்ட அனைத்தையும் பொறுப்பேற்றுக்கொண்டு முன்மாதிரியான நிகழ்ச்சியாக மட்டுமல்லாமல், முன்மாதிரியான கட்டமைப்பாகவும் உலகத் திருக்குறள் ஆர்வலர்களின் நம்பிக்கையைப் பெற்று பயணிக்கிறது என்பதில் பெருமை கொள்வோம்.

நேரடி செலவுகளை ஆர்வமுள்ளவர்கள் பொறுப்பெற்று பகிர்ந்துகொள்ளக் கேட்டிருந்தோம். கீழ்காணும் ஆர்வலர்கள் புரவலர்களாக மாறி பொறுப்பேற்று செலவுகளை ஏற்றுக்கொண்டனர். அனைவருக்கும் மனமார்ந்த நன்றி... ஒரு வெற்றிகரமான, முன்மாதிரியான, செயல்விளைவு மிக்க ஒரு நிகழ்ச்சிக்கு துணைநின்றதை பெருமிதமாகக் கருதலாம்.

- முனைவர். மயில்சாமி அண்ணாதுரை , அறிவியலாளர்
- "கற்க கசடற" அமைப்பின் திரு.செந்தில் (அரங்க வாடகை)
- திருக்குறள் பழனி, கேளம்பாக்கம் , தலைமைப் பயிற்சியாளர்
- திரு. கதிரவன் , எனைத்தானும் நல்லவை கேட்க
- திருமதி. ஜெயா இரவி, டெல்லி?
- முனைவர். சுந்தரவடிவேல், PranaScience, USA
- திரு. சக்கரபாணி ,
- திரு. போஸ்
- திரு. இரவி சொக்கலிங்கம் , உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்
- திரு. ச. பார்த்தசாரதி, உலகத்த திருக்குறள் முற்றோதல் இயக்கம் .
- திரு.செந்தில் துரைசாமி, டெக்ஸாஸ், அமெரிக்கா, Thirukkural Translations in World Languages
- திரு.இளங்கோ தங்கவேலு , மிசௌரி, அமெரிக்கா, Thirukkural Translations in World Languages

பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலின் பெரிது. (குறள் - 103)

## திட்டமிட்ட செயல்பாடுகளை செய்து.. முற்றோதல் கள விளைவுகளோடு மீண்டும் அடுத்த ஆண்டு சந்திப்போம்..

*“திருக்குறள் ஐம்பெரும் விழா” நிகழ்ச்சி முன்பதிவுக்கு உதவிய www.GlobalTamilEvents.com தொழில்நுட்பக் குழுவிற்கு நன்றி.*

*எதிர்காலத்தில் நடக்கும் திருக்குறள் நிகழ்வுகளுக்கு தொடர்புகொள்ள இங்கே இன்னும் உங்கள் விவரத்தை பதிவுசெய்யலாம்.*

*www.GlobalTamilEvents.com/thirukkural-vizha-2024-tview1223.html*








## திருக்குறள் தற்சார்பு : எங்கள் மாவட்டம்–எங்கள் பொறுப்பு

எங்கள் மாவட்ட மாணவர்களுக்கு, எங்கள் மாவட்டத்தில் படித்த ஒருவருக்கு வேலைவாய்ப்பை ஏற்படுத்தி பயிற்சியாளராக்கி, எங்கள் மாவட்டத்தில் அறம்சார் தொழில் செய்பவர்களைப் புரவலர்களாகக் கொண்டு, எங்கள் மாவட்ட வெளிநாடுவாழ் தமிழர்களின் துணையோடு திருக்குறள் முற்றோதல் பயிற்சியை வழங்கி, உயர்நெறியுடன் கூடிய மாணவர்களை உருவாக்குவோம். திருக்குறள் முற்றோதல் முடித்த மாணவர்களாக ஆண்டுக்கு நூறுபேரை உருவாக்கி எங்கள் மாவட்ட அரசு நிர்வாகத்துடன் இணைந்து தமிழ்நாடு அரசு வழங்கும் ரூபாய் 15000 விருதையும், முற்றோதல் சாதனை சான்றிதழையும் பெற உழைப்பது நமது இலக்காகும். திருக்குறள் கற்றுத்தேர்ந்து இளநிலை மனப்பாடம், முதுநிலை பொருள் உணர்தல் என்று இருநிலைகளைக் கடந்த மாணவர்களுக்கு கல்வி, வேலைவாய்ப்பு, தொழில்வாய்ப்பு, வெளிநாட்டு வாய்ப்புகள் என்று பல்வேறு வாய்ப்புகளை ஏற்படுத்தி, திருக்குறளை முழுதும் படித்தவர்களுக்கு முன்னுரிமை வழங்குவோம். அரசு பெரும்தொகை பரிசு வழங்கினாலும் திருக்குறள் கற்க முன்வராத நிலையை மாற்றுவோம்

அன்பார்ந்த தமிழ்நாடு வாழ், வெளிநாடுவாழ் அன்பர்களே.. தமிழ்நாட்டில் ஆகச்சிறந்த ஒரு செயலை செய்யவேண்டுமானால் அது தனிமனித மாற்றம்தான். அவர்களை நற்சிந்தனையுடன், சமூகப்பொறுப்புடன் உருவாக்கிவிட்டால் அவர்கள் தாங்கள் பிறந்த ஊரை, மாவட்டத்தை, மாநிலத்தை, நாட்டை பெருமைகொள்ளச் செய்வார்கள். எனவே சமூக அக்கறைகொண்ட உங்களை உங்கள் மாவட்டத்தில் திருக்குறள் படித்த மாணவர்கள் உருவாக, முற்றோதல் ஆசிரியர்கள் உருவாக அன்புடன் அழைக்கிறோம்

## ஏற்கனவே பொறுப்பேற்றுள்ள புரவலர்களுக்கு நன்றி...!! நன்றி.. !!

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் நன்கொடை பெறுவதில்லை. செயல்பாடுகளை கண்டறிந்து அறம் சார்ந்த மனிதர்கள், நிறுவனங்கள் அந்தந்த மாவட்டத்திலிருந்து அவர்கள் சார்ந்த மாவட்டத்தின் புரவலர் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று வலியுறுத்துகிறோம். மாணவர்களுக்கு சான்றிதழ் வழங்குதல், பரிசளித்தல், பகுதிநேர, முழுநேர திருக்குறள் முற்றோதல் பயிற்சியாளர்களுக்கு ஊக்கத்தொகையை நேரடியாக வழங்குதல் உள்ளிட்டவற்றிற்கு அந்தந்த மாவட்டத்தை சார்ந்தவர்கள் பொறுப்பேற்றுக்கொள்ளுங்கள்.

**Mayiladuthurai**
**மயிலாடுதுறை**





திரு. ஜெனிபர் பவுள்ராஜ்

**Chengalpattu**
**செங்கல்பட்டு**



திரு. மணி பெரியகருப்பன்,
ஓகாயோ , அமெரிக்கா

**Salem**
**சேலம்**



முனைவர். தங்கராசு பெரியசாமி

**Karur**
**கரூர்**




திரு. க. செங்குட்டுவன்,
தாளாளர்
Valluvar Science & Management College

**Thiruvarur**
**திருவாரூர்**



திரு. இளங்கோ,
சிங்கப்பூர்

**Pondicherry**
**புதுச்சேரி**



முனைவர். வி. முத்து
தலைவர்,
புதுவைத் தமிழ்ச்சங்கம்

**Dindigul**
**திண்டுக்கல்**



திரு. பாஸ்கர் குமரேசன்,
வெர்சீனியா, அமெரிக்கா

**Thanjavur**
**தஞ்சாவூர்**



திரு. வீ. இளவழுதி,
வெர்சீனியா, அமெரிக்கா

**பிற தேவைகள் உள்ள மாவட்டங்கள்:** அரியலூர், ஈரோடு, உதகமண்டலம், கடலூர், கள்ளக்குறிச்சி, காஞ்சிபுரம், கிருஷ்ணகிரி, கோயம்புத்தூர், சிவகங்கை, செங்கல்பட்டு, சென்னை, தர்மபுரி, திருச்சி, திருநெல்வேலி, திருப்பத்தூர், திருப்பூர், திருவண்ணாமலை, திருவள்ளூர், தூத்துக்குடி, தென்காசி, தேனி, நாகப்பட்டினம், நாகர்கோயில், புதுக்கோட்டை, பெரம்பலூர், மதுரை, ராணிப்பேட்டை, ராமநாதபுரம், விருதுநகர், விழுப்புரம், வேலூர்

# மாவட்டத்  திருக்குறள் செயல்பாடுகள்

## திருவண்ணாமலை மாவட்டம்

2.2.2024 *அன்று திருவண்ணாமலை மாவட்டம் அடி அண்ணாமலை அரசினர் உயர்நிலைப் பள்ளி மாணவ மாணவியற்கு திருக்குறள் நூல்கள் வழங்கப்பட்டன.*




## விருதுநகர் மாவட்டம்

# திருக்குறளால் மாணவர்கள் மாமனிதர்களாக வேண்டும்

**குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்**

விருதுநகர், பிப். 2: மாணவர்கள் திருக்குறளை தினமும் கற்று தங்களை மாமனிதர்களாக உயர்த்திக் கொள்ள வேண்டும் என்றார் குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்.

விருதுநகர் அரசு மருத்துவக் கல்லூரி கலையரங்கத்தில் வெள்ளிக்கிழமை நடைபெற்ற திருக்குறள் மாணவர் மாநாடு– 2024 தொடக்க விழாவில் சிறப்பு அழைப்பாளராகப் பங்கேற்று, மாணவர்கள் வரைந்த குறள் ஓவியக் கண்காட்சி அரங்கத்தைத் திறந்துவைத்து அவர் மேலும் பேசியதாவது:

2 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் படைக்கப்பட்ட திருக்குறள், நவீன தொழில்நுட்பங்கள் வளர்ந்துள்ள இந்தக் காலத்திலும் நமக்குப் புதிய, புதிய விளக்கங்களை அளித்துக் கொண்டே இருக்கிறது. மனிதனை மனிதனாக வாழ வைக்கும் கல்வியைப் பெறுவதற்கு திருக்குறள்தான் மிகச் சிறந்த வழிகாட்டி.

எல்லோருக்கும் எல்லாமும் கிடைக்க வேண்டும் என்பதை உணர்த்துகிறது திருக்குறள். இது தான் உண்மையான ஞானப் பார்வை. வாழ்க்கையின் அனைத்து நிலைகளிலும் திருக்குறள் வழிகாட்டியாக விளங்குகிறது. காட்டுவழிப் பாதைக்கு கை விளக்காகவும், கடல்வழிப் பாதைக்கு கலங்கரை விளக்காகவும், மலைவழிப் பாதைக்கு குன்றின் மேல் இட்ட விளக்காகவும் இருந்து திருக்குறள் வழிகாட்



விருதுநகரில் வெள்ளிக்கிழமை நடைபெற்ற திருக்குறள் மாணவர் மாநாடு தொடக்க விழாவில், மாணவர்களின் குறள் ஓவியக் கண்காட்சி அரங்கத்தைத் திறந்து வைத்து பார்வையிட்ட குன்றக்குடி பொன்னம்பல அடிகளார். உடன் மாவட்ட ஆட்சியர் வீ.ப. ஜெயசீலன் உள்ளிட்டோர்.

உற்ற நண்பனாக இருந்து வழிகாட்டுபவர் திருவள்ளுவர். எனவே, மாணவர்கள் தினமும் திருக்குறளைப் படிப்பதை தங்களது வாழ்வில் வழக்கமாக்கிக் கொண்டு, தங்களை மாமனிதர்களாக உயர்த்திக் கொள்ளவேண்டும் என்றார் அவர்.

மாவட்ட ஆட்சியர் வீ.ப. ஜெய

ஒருவர் மிகப் பெரிய அறிவாளியாக இருந்தாலும், அவர் எதிர்கொள்ளும் வாழ்வியல் சிக்கலை ஆற்றுப்படுத்த ஒரு வழிகாட்டி அவசியம். உறவுகள் ஓர் குறிப்பிட்ட அளவிலான பங்களிப்பையே அளிக்க முடியும். ஆனால், அனைத்து உறவுகளும் இணைந்த ஒருவராக இருந்து ஆற்றுப்படுத்தரால்தான் முடியும். உலக சமுதாயத்தின் உற்ற தோழர் அவர். நாம் உயரவும், நம்மைச் சார்ந்தோரை உயர்த்தவும் எப்போதும் கைக்கொள்ள வேண்டிய ஒரே தத்துவம் திருக்குறள்.

மாணவர்கள் திருக்குறளோடும், தமிழ்ப் பண்பாட்டுடனும், தமிழ் மரபோடும் எப்போதும் ஒன்றியி

முன்னதாக, கவிஞர் வைரமுத்து காணொலி மூலம் இந்த மாநாட்டைத் தொடங்கி வைத்துப் பேசினார்.

தமிழ்நாடு பாடநூல், கல்வியியல் பணிகள் கழக இணை இயக்குநர் சங்கர சரவணன், திரைப்பட இயக்குநர் பாரதி கிருஷ்ணகுமார் ஆகியோர் முன்னிலை வகித்தனர்.

திரைப்பட நடிகர் சிவக்குமார் திருக்குறளின் பெருமையையும், இதில் உள்ள வாழ்வியல் நெறிகள் குறித்தும் கதை, எடுத்துக்காட்டுகளுடன் உரையாற்றிய விடியோ பதிவு மாணவர்களுக்கு திரையிடப்பட்டது.

இதில் மாவட்ட வருவாய் அலுவலர் இரா. ராஜேந்திரன், மாவட்ட ஊரக வளர்ச்சி முகமைத் திட்ட இயக்குநர் ஆர். தண்டபாணி, எழுத்தாளர் மரு. அறம், அரசு அலுவலர்கள், ஆசிரியர்கள், மாணவர்கள் கலந்து கொண்டனர்.

**இரு நாள் மாநாடு...** விருதுநகர் மாவட்ட நிர்வாகம், தமிழ் இணையக் கல்விக் கழகம் சார்பில் திராக்காதல் திருக்குறள் திட்டத்தின் கீழ் தமிழ்த் திறனறித் தேர்வில் வெற்றி பெற்ற மாணவர்களுக்கான நிகழ்வாக இந்த மாநாடு நடைபெறுகிறது. இரண்டாம் நாளாக சனிக்கிழமையும் மாநாடு நடைபெறுகிறது.

தமிழ்த் திறனறித் தேர்வில் வெற்றி பெற்ற தமிழகத்தின் பல்வேறு பகுதிகளைச் சேர்ந்த மாணவர்கள், ஆசிரியர்கள் இதில் கலந்து

# நீலகிரி மாவட்டம்

*03.02.24 நீலகிரி மாவட்டம் குன்னூர் ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கப்பட்டன.*



# திருவள்ளூர் மாவட்டம்

*03.02.24 இராமநாதபுரம் மீஞ்சூர் ஊராட்சி ஒன்றியத் தொடக்கப் பள்ளி மாணவர்கள் 14 பேர் தமிழ் வளர்ச்சித் துறையின் மூலம் நடைப்பெற்ற திருக்குறள் முற்றோதல் போட்டியில் கலந்துகொண்டு வெற்றி பெற்றார்கள்.*



மீஞ்சூர் ஊராட்சி ஒன்றியத் தொடக்கப் பள்ளி இராமநாதபுரம் பள்ளியில் திருக்குறள் பயின்று *2022-2023*ஆம் கல்வி ஆண்டில் தமிழ் வளர்ச்சித் துறை மூலம் நடைபெற்ற திருக்குறள் முற்றோதல் போட்டியில் கலந்து கொண்டு வெற்றி பெற்ற மூன்று மாணவர்களுக்கு திருவள்ளூர் மாவட்ட ஆட்சியர் அவர்களால் தமிழக அரசு சார்பில் வழங்கப்பட்ட பரிசு த்தொகையும் பாராட்டுச் சான்றிதழும் இன்று மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் வழங்கப்பட்டது.



## திருச்சி மாவட்டம்

### திருச்சியில் மே 1–இல் திருக்குறள் ஒப்பித்தல் போட்டி

**திருச்சி, மார்ச் 9:** திருக்குறள் திருமூலநாதன் அறக்கட்டளை சார்பில், 26–ஆவது ஆண்டு திருக்குறள் ஒப்பித்தல் போட்டி (திருக்குறள் திருவிழா) திருச்சியில் மே 1–ஆம் தேதி நடைபெறவுள்ளது.

இது குறித்து அறக்கட்டளைத் தலைவர் பூவை பி. தயாபரன் வெளியிட்டுள்ள செய்திக் குறிப்பு: திருக்குறள் திருமூலநாதன் அறக்கட்டளை சார்பில் 26–ஆவது ஆண்டு திருக்குறள் ஒப்பித்தல் போட்டி திருச்சியில் மே 1–ஆம் தேதி நடைபெறவுள்ளது.

இந்தப் போட்டியில், தமிழகம் முழுவதும் இருந்து பள்ளி மாணவ, மாணவிகள் கலந்து கொள்ளலாம். இவர்களில், 1,330 திருக்குறளையும் ஒப்பிக்கும் மாணவர்களுக்கு ரூ.2,000 ரொக்கம், திருக்குறள் செல்வன், செல்வி விருது வழங்கப்படும்.

போட்டிக்கான விண்ணப்பத்தை இணையத்திலிருந்து (https://sites.google.com/view/thirumulanathand/thirukkural-thirumoolanathan-arakkattalai) பதிவிறக்கம் செய்து, இணைய வழியாகவே அனுப்பலாம்.

விருப்பமுள்ள மாணவர்கள் ஏப்.15ஆம் தேதிக்குள் thirumulanathan@gmail.com என்ற மின்னஞ்சலில் முன்பதிவு செய்ய வேண்டும். நுழைவுக் கட்டணம் இல்லை.

கூடுதல் விவரங்களுக்கு 97865-86992 என்ற கைப்பேசி எண்ணில் தொடர்பு கொள்ளலாம் என்று தெரிவித்துள்ளார்.

# காஞ்சிபுரம் மாவட்டம்

*05.02.24* காஞ்சி மாநகர் நடுநிலைப்பள்ளி இணைய வழி திருக்குறள் கற்கும் மாணவர்கள்



# திண்டுக்கல் மாவட்டம்

*10.02.24* ஒட்டன்சத்திரம் கே. ஆர். அரசு மேல்நிலைப்பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் புத்தகங்கள் வழங்கப்பட்டன.



# புதுச்சேரி

புதுச்சேரி மணக்குள விநாயகர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி பேராசிரியர் சங்கீதா கண்ணன் அவர்கள் 1330 திருக்குறளை 1330 மின் அட்டையில் எழுதி புதிய சாதனை படைத்தார் அந்த சாதனை அட்டைகளை (30.01.24) இன்று கல்லூரியில் காட்சிப்படுத்திப் பல மாணவர்கள் கண்டு களிக்கும் வகையில் மிகச் சிறப்பாக ஏற்பாடு செய்திருந்தார். இதற்காக எடுத்துக் கொண்ட நேரங்கள் 12 மணி நேரம். இச்சாதனை ஆல் இந்தியா புக் ஆப் ரெகார்டிங்கால் சாதனையாக அங்கீகரிக்கப்படுகிறது.







# நாமக்கல் மாவட்டம்

நாமக்கல் மாவட்டம், இராசிபுரம்  வட்டம், வெள்ளக்கல்பட்டி ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளியில் ஏழாம் வகுப்பு பயிலும் மாணவி ச.தவப்பிரியா அவர்கள் நாமக்கல் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் அலுவலகத்தில் கடந்த 8 பிப்ரவரி 2024 அன்று திருக்குறளில் உள்ள 1330 குறட்பாக்களையும் பிழையின்றி ஒப்புவித்து மிகப்பெரிய சாதனை செய்துள்ளார். 2022-இல் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் மண்டல தலைமைப் பயிற்சியாளர் தமிழ்த்திரு. திருக்குறள் காமராசு ஐயாவிடம் திருக்குறள் கற்கத் தொடங்கிய மாணவி ச.தவப்பிரியா தொடர்ந்து இணையவழியில் பயிற்சி பெற்று இச்சாதனையை புரிந்துள்ளார். அவருக்கு உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் சார்பாக பாராட்டுகளையும் வாழ்த்துகளையும் தெரிவித்துக் கொள்கிறோம்.





## திருக்குறளை ஒப்புவித்த மாணவிக்கு பாராட்டு

நாமகிரிப்பேட்டை, பிப். 23-

நாமகிரிப்பேட்டை டவுன் பஞ்., வெள்ளக்கல்பட்டி அரசு பள்ளியில், 7ம் வகுப்பு படித்து வருபவர் மாணவி தவப்பிரியா. இவர், மாவட்ட தமிழ் வளர்ச்சி உதவி இயக்குனர் அலுவலகத்தில், 1,330 திருக்குறளையும் பிழையின்றி ஒப்புவித்தார். எந்த அதிகாரத்தை கேட்டாலும் சொல்வதுடன், குறள் எண்ணை குறிப்பிட்டாலும் அதற்கான குறளை கூறிவிடுவார். 1,330 குறளையும் பிழையின்றி சொல்லிய மாணவிக்கு, தலைமை ஆசிரியர் சுந்தரம் சால்வை அணிவித்து பரிசு வழங்கினார். அதேபோல், மாணவிக்கு உதவிய மறைந்த தமிழாசிரியர் மகன் செந்தில் செல்வன், இணைய வழியில் மாணவிக்கு பயிற்சி அளித்த காமராஜ் மற்றும் உலக திருக்குறள் முற்றோதல் இயக்க ஒருங்கிணைப்பாளர் கொழந்தைவேல் ராமசாமி, பெற்றோர் ஆசியர் கழக உறுப்பினர்களுக்கு, தலைமை ஆசிரியர் நன்றி தெரிவித்தார்.

■ மாணவி தவப்பிரியாவிற்கு, தலைமை ஆசிரியர் சுந்தரம் நினைவு பரிசு வழங்கினார்.

# தஞ்சாவூர் மாவட்டம்

*16.02.24 அன்று தமிழ்நாடு அரசுபரிசு பெற்ற தஞ்சை முற்றோதல் பயிற்றகத் திருக்குறள் செல்வங்கள் சி.தேவதர்ஷினி 2 ஆம் வகுப்பு சி.சாய்செல்வா 3 ஆம் வகுப்பு மற்றும் அவர்களது பெற்றோரும் பள்ளி ஆண்டுவிழாவில் பரிசளித்து பாராட்டியபோது.*



# திருவாரூர் மாவட்டம்














*கிளரியம் ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கப்பட்டன.*





*20.02.24 அன்று உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் - உலகத் தமிழ்வளர்ச்சி மன்றத்தின் சார்பாக திருவாரூர் மாவட்ட ஆட்சியர் திருமதி. சாரு ஸ்ரீ, இ.ஆ.ப. அவர்களை ஹார்வார்ட் தமிழிருக்கை புரவலர் மருத்துவர் ஜானகிராமன் அவர்கள் சந்தித்து திருக்குறள் நூல் வழங்கி, மாவட்டம்தோறும் முன்னெடுக்கப்படும் திருக்குறள் வளர்ச்சிப்பணிகள், திருவாரூர் மாவட்டத்தில் மேற்கொள்ளவேண்டிய பயிற்சிக் கட்டமைப்பு உள்ளிட்டவை குறித்து கலந்துரையாடினார்.*



# தேனி மாவட்டம்

தேனி மாவட்டத்தில் முதன்முறையாக திருக்குறள் முற்றோதல் உலகச்சாதனை நிகழ்ச்சி போடிநாயக்கனூர் சவுண்டீசுவரி நடுநிலைப் பள்ளியில் தேனி வையைத் தமிழ்ச்சங்க நிறுவுநர் புலவர் ச.ந.இளங்குமரன் தலைமையில் நடைபெற்றது.

தலைமை ஆசிரியர் சதீஷ்குமார் வரவேற்புரை வழங்க, போடி வட்டாரக் கல்வி அலுவலர் ராஜமுருகன் திருக்குறளார் முத்துக்காமாட்சி, மகாலிங்கம் ஆகியோர் வாழ்த்துரை வழங்க அகில இந்திய சாதனைப் பதிவு நிறுவனத்தின் தலைவர் வெங்கடேசன் அவர்களும், ஆசியன் சாதனைப் பதிவு நிறுவனத்தின் தலைவர் விவேக் அவர்களும் கலந்து கொண்டு நிகழ்வினைக் கண்காணித்துச் சிறப்புரை வழங்கி உலகச் சாதனைப் பட்டயத்தை வழங்கினர். பள்ளிச் செயலர் சிறப்பு விருந்தினர்கள் அனைவருக்கும் நூலாடை அணிவித்துச் சிறப்பித்தார். 150 மாணவர்கள் 1330 குறட்பாக்களை 107 நிமிடங்களில் முற்றோதல் செய்து உலகச் சாதனை படைத்த இந்நிகழ்வினை பள்ளியின் தமிழாசிரியர் அ.இலட்சுமி குமரேசன் நெறிப்படுத்தினார். பள்ளியின் ஆசிரியப் பெருமக்களும், நிர்வாகக் குழுவினரும், பெற்றோர்களும் திரளாகக் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.



**செப்பம் உடையவன் ஆக்கஞ் சிதைவின்றி**
**எச்சத்திற் கேமாப்பு உடைத்து. - குறள்: 112**

நடுவுநிலைமை உடையவனின் செல்வவளம் அழிவில்லாமல் அவனுடைய வழியிலுள்ளார்க்கும் உறுதியான நன்மை தருவதாகும்.

5ஆம் உலகத் திருக்குறள் மாநாடு

INTERNATIONAL CONFERENCE ON

THIRUKKURAL

CHICAGO,USA

April 5th to 7th, 2024

SHERATON LISLE HOTEL
3000 Warrenville Rd, Lisle, IL 60532, USA

பத்மஸ்ரீ, கலைமாமணி, முத்தமிழ் பேரறிஞர்
பேராசிரியர் சாலமன் பாப்பையா

தலைமை விருந்தினர் & விவாத மேடை நடுவர்

REGISTER NOW

https://registration.thirukkuralconference.org

அனைவரையும் வருக... வருக... என
அன்புடன் வரவேற்கிறோம்.

www.thirukkuralconference.org | programs@thirukkuralconference.org

டெலவர் பெருநிலத் தமிழ்ச் சங்கம்

TAMIL ASSOCIATION OF GREATER DELAWARE VALLEY (TAGDV)

A Registered,Non-Profit 501©(3) Tax Exempt Organization

அகர ஆதி பகவன் முதற்றே உலகு
முதல எழுத்தெல்லாம்

This is a free event for TAGDV members

திருக்குறள் மற்றும் தமிழ்த்தேனீ போட்டிகள்

STETSON MIDDLE SCHOOL,
1060 WILMINGTON PIKE, WEST CHESTER, PA 19382
MARCH 16TH 11:00AM - 4:00PM

Visit tagdv.org to register and for syllabus/rules
Last date for registration is March 8th

கற்க கசடற
karka.in

மனத்துக்கண் மாசிலன் ஆதல்

வலைத்தமிழ்.காம்
www.ValaiTamil.com

நிகழ்வு 52

இணைந்து வழங்கும்
நவில்தொறும் நூல்நயம்

சிறப்புத் தொடர் 2

வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள்
குறித்த எண்ணப் பகிர்வுகள்

23.02.24
வெள்ளிக்கிழமை
மாலை
6.30-7.45

நூல்–நூலாசிரியர்

வள்ளுவம்

1.வள்ளுவர் நெஞ்சம்

பேராசிரியர் வ. சுப. மாணிக்கனார்
மேனாள் துணைவேந்தர்,
காமராசர் பல்கலைக் கழகம், மதுரை

முதல் அத்தியாயம் பற்றிய நயவுரை

திரு. சி. இராஜேந்திரன் IRS(R),
நிறுவுநர் - ஒருங்கிணைப்பாளர்,
வள்ளுவர் குரல் குடும்பம்

Zoom ID: 988 6476 9563
Passcode: 1330

1917 - 1989

voiceofvalluvar1330@gmail.com
www.voiceofvalluvar.org

https://karka.in

watch on: www.valaitamil.tv
www.youtube.com/ValaiTamil

திருவள்ளுவரைப் போற்றுவோம்! திருக்குறள் நெறி பரப்புவோம்!

மயிலாடுதுறைத் திருக்குறள் பேரவை

(தொடக்கம் : 25.12.2011)

முகவரி : வள்ளுவர் கோட்டம்,31.விசித்திராயர் வீதி. மயிலாடுதுறை.

(பேரவை நிறுவனர் : தேசிய நல்லாசிரியர் கோ.நீலகண்டனார்)

உலகப் பொதுமறை

திங்கள் கூட்டம் - 109

கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன்று உள்ளக் கெடும். (குறள் 109)

(ஒருவர் செய்த நன்மையை மறப்பது நல்ல பண்பு ஆகாது; ஆனால் அவர் செய்த தீமையை அன்றைக்கே மறந்து விடுவது மிகவும் நல்லது.)

நாள் : நிகழும் திருவள்ளுவராண்டு 2055 மாசித் திங்கள் 13–ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை
25.02.2024 மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை.

இடம் : திருவள்ளுவர் அரங்கம், தியாகி ஜி.நாராயணசாமி ந.மே.பள்ளி, மயிலாடுதுறை.

இனிய நற்றமிழ்ச்சான்றீர் ! நல் வணக்கம்.

நம் பேரவையின் திங்கள் கூட்டம் கீழ்க்காணும் நிகழ் நிரலின்படி நடைபெற உள்ளது. அனைவரும் வருகை தந்து சிறப்பிக்க வேண்டுமாய் அன்புடன் வேண்டுகிறோம்.

என்றும் தங்கள் அன்புடன் : நிருவாகிகள், மயிலாடுதுறைத் திருக்குறள் பேரவை

நிகழ்ச்சி நிரல்

| | | |
|---|---|---|
| தலைமை | : | முனைவர் சி.சிவசங்கரன், பேரவைத்தலைவர். |
| தமிழ்த்தாய் வாழ்த்து குறளும் பொருளும் | : | சு.பிரியதர்ஷினி, பா.யோகேஸ்வரி, சு.அனுஷ்கா, சு.சாதனா மூ.மூ.இரா.அ. அரசு உயர்நிலைப்பள்ளி, மூவலூர். |
| வரவேற்புரை | : | இரா.செல்வக்குமார், பேரவைச் செயலாளர். |
| தொடக்கவுரை | : | ச.பார்த்தசாரதி, ஆசிரியர், வலைத்தமிழ்.பன்னாட்டு இதழ். ஒருங்கிணைப்பாளர், உலகத்திருக்குறள் முற்றோதல் இயக்கம். |

சிறப்புரை

"செந்தமிழ் நாவலர்"
முனைவர். த.அகரமுதல்வன்
மேனாள் தமிழ்த்துறைத்தலைவர், பூம்புகார்க் கல்லூரி.
தலைப்பு : "திருவள்ளுவரும், சேக்கிழாரும்"

நன்றியுரை : சு.இராமச்சந்திரன், பேரவைப் பொருளாளர்.

குறிப்பு : நிகழ்ச்சி குறித்த நேரத்தில் தொடங்கிட காலத்தே வருகை தாருங்கள்.

நிகழ்ச்சி ஒருங்கிணைப்பு:

தங்க. செல்வராசு, இணைச்செயலாளர்
சு.இளங்கோவன், செயற்குழு உறுப்பினர்
வீதி.முத்துக்கனியன், செய்தித் தொடர்பாளர்

இணையதள முகவரி : www.MayiladuthuraiThirukkuralPeravai.com
www.facebook.com/MayiladuthuraiThirukkuralPeravai

வளர்ச்சி நிதியும், உறுப்பினர் கட்டணமும், புதிய உறுப்பினர் சேர்க்கையும் வரவேற்கப்படுகிறது.

# திருக்குறள் ஒப்பித்தல் போட்டி



போட்டியில் வெற்றி பெற்று திருக்குறள் நூல் மற்றும் பரிசு பெற்ற மாணவர்கள்.

**வாணியம்பாடி, பிப். 19:** வாணியம்பாடி அடுத்த சின்னகம்மியம்பட்டு அரசுப் பள்ளியில் திருக்குறள் ஒப்பித்தல் போட்டி நடைபெற்றது.

இந்தப் பள்ளியில் ஆண்டு விழா திருக்குறள் ஒப்பித்தல் போட்டி நடைபெற்றது. இதில் வெற்றி பெற்ற மாணவ, மாணவிகளுக்கு வாணியம்பாடி திருக்குறள் மன்றம் மற்றும் வாணியம்பாடி லயன்ஸ் கிளப் சார்பில் திருக்குறள் புத்தகம் மற்றும் பரிசுகள் வழங்கப்பட்டன.

இதில் தலைமையாசிரியர் ரவி, சிறப்பு விருந்தினர்களாக வழக்குரைஞர் ஞானமோகன், லயன்ஸ் கிளப் முன்னாள் ஆளுநர் ரவிச்சந்திரன், வாணியம்பாடி திருக்குறள் மன்ற நிர்வாகிகள் சத்தியமூர்த்தி, முருகன், மோகன், சாந்தகுமார் உள்பட பலர் கலந்து கொண்டனர்.

தினமணி Tue, 20 February 2024
https://epaper.dinamani.com/c/74595985



**சிறப்புஈனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு**
**ஆக்கம் எவனோ உயிர்க்கு. - குறள்: 31**

அறம், சிறப்பையும் அளிக்கும்; செல்வத்தையும் அளிக்கும்; ஆகையால் உயிர்க்கு அத்தகைய அறத்தைவிட நன்மையானது வேறு யாது?









"குறள் வழி" இதழ் அதிகமானவர்களுக்கு சென்று சேரவும், இதை வடிவமைப்பு முதல் அனுப்புவதுவரை இதற்கென ஒரு சிறு ஊதியத்தில் தொய்வில்லாமல் வெளிவர உதவும் நோக்கில் விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன.

We are looking for Advertisers and sponsors to take Kural Vazhi to more people and more places and engage professional designer and distribution resources.

**TO SUPPORT: kuralvazhi@gmail.com**









**குறள் சொல்வோம்..!**
**குறள் வழி வாழ்வோம்..!**







# மாணவ- மாணவியர்களுக்கு ஓர் இனிய செய்தி

## 2024-2025 ஆம் கல்வியாண்டில் நமது வள்ளுவர் கல்லூரியில் சேரும் மாணவ மாணவியர்களுக்கு

## மூன்றாண்டுகளுக்கும் இலவசக் கல்வி !

- 500 திருக்குறள்களை ஒப்புவித்தால் ஒரு வருடம் கல்லூரிக் கட்டணம் இலவசம்.
- 1000 திருக்குறள்களை ஒப்புவித்தால் இரண்டு வருடம் கல்லூரிக் கட்டணம் இலவசம்.
- 1330 திருக்குறள்களை ஒப்புவித்தால் மூன்றாண்டும் கல்லூரிக் கட்டணம் இலவசம்.

### COURSES OFFERED

UNDER GRADUATE PROGRAMMES:

- B.A. English
- B.A. Tamil
- B.A. Public Administration
- BBA
- B.Com
- B.Com. (Computer Applications)
- B.Com. (Professional Accounting)
- BCA
- B.Sc. Computer Science
- B.Sc. Fashion Technology & Costume Designing
- B.Sc. Hotel Management & Catering Science
- B.Sc. Mathematics
- B.Sc. Physics

POST GRADUATE PROGRAMMES:

- M.A. English
- M.Com. (Computer Applications)
- M.Sc. Computer Science
- M.Sc. Mathematics

RESEARCH PROGRAMMES:

- M.Phil. Commerce
- Ph.D. Commerce

DIPLOMA COURSES:

- Diploma in Food Production
- Diploma in Banking & Finance

PROFESSIONAL PROGRAMME

- M.B.A




@ valluvarcollege @VCSM Events www.vcsm.ac.in 9944450507 / 9791726481 / 9791736481